Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 32—No. 5



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விகாரி வைகாசி 1959 மே | இதழ் 5

உள்ளுறை

பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3

தனிப்பிரதி அணா 4

## செய்திச் சுருக்கம்

மெய்கண்டார் கழகம், காஞ்சிபுரம் :—திருவேகம்ப நாதர் பங்குனியுத்திரப் பெருவிழாவில் திருவாளர்கள் ச. சிவகுமாரன் M. A., C. A. விமலாநந்தம் B Sc., வித்துவான் கா. அ. மார்க்கபந்து, வே. மு. பிரமீச முதலியார், க. சோமசுந்தரஞ் செட்டியார், M. N. சாம்பசிவ சிவாசாரியர், ஆலாலசுந்தரஞ் செட்டியார் M. A., வித்துவான் சி. அருணைவடிவேல் முதலியார், K. இராமநாத ஆச்சாரியார், புலவர் முருகவேள், மா. சுந்தரமூர்த்தி முதலியார், திரு. ஆறுமுக முதலியார், M. A. B. T., பூ. சமரபுரி முதலியார், சே. த. இராமலிங்கம் பிள்ளை, B. A., B. T., ம. பொ. அண்ணாமலை முதலியார், சி. அண்ணாமலை முதலியார், ந. சஞ்சீவி M. A., க. வச்சிரவேல் முதலியார், B.A., L.T., வித்துவான் க. சம்பந்த முதலியார், வே. சுந்தரமூர்த்தி பாரதியார், வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் ஆகிய நுண்மாண் நுழைபுலம் மிக்க பேரறிஞர்கள் பலர் கலந்து கொண்டு சொற்பொழி வாற்றினர்.

நன்னெறி மன்றம், நாகர்கோயில் :—23–4–59 அன்று கோட்டாறு தேசிக விநாயகர் உயர்தரப் பாடசாலையில் திருமிரு. S. S. அருணாசலம் பிள்ளை அவர்கள் தலைமையில், பாலகவி வயிநாகரம் இராமநாதன் செட்டியார் அவர்கள் நடத்த இருக்கும் சிவஞான சித்தியார் வகுப்பு தொடங்கப் பெற்றது. அதுபோது திரு. C. வள்ளிநாயகம் பிள்ளை B. A., B. L., திரு. K. ஆறுமுக நாவலர், சைவப்புலவர் இ. பகவதிப் பெருமாள் பிள்ளை, வித்துவான் K. சிதம்பரதாணு ஆகியோர் கலந்து கொண்டு சொற்பொழி வாற்றினர். இம்மன்றத்தின் சார்பில் 21–4–59 அன்று கன்னியாகுமரி திருவாவடுதுறை ஆதீன மடத்தில் உமாபதி சிவாசாரியர் மாதவச் சிவஞான முனிவரர் குருபூசைப் பிரார்த்தனைக் கூட்டம் சிறப்புற நடைபெற்றது. S. கோலப்பன், வித்துவான் பூதலிங்கம், க. சுப்பிரமணியம் M. A. ஆகியோர் இம் மன்றத்தின் செயலாளராகப் பணிபுரிந்து வருகின்றனர்.

திருநாவுக்கரசு நாயனார் சைவசித்தாந்தக் கழகம், திருத் துறையூர் :—23–4–59 முதல் 2–5–59 வரையில் திருவதிகைத் திருவீரட்டானத்தில் திருநாவுக்கரசர் திருவிழா நாட்களில் திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் அவர்கள் தலைமை

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு

மலர் 32 | விகாரி வைகாசி 1959 மே | இதழ் 5

## அளவை இயல்

[முருகவேள்]

அளவை என்பது தருக்க சாத்திரத்துக்கு ஒரு பெயர். பொருள்களின் உண்மையும் இயல்பும் ஆராய்ந்து அளந்து அறிதற்குக் கருவியாதல் பற்றித் தருக்க நூல் அளவை நூல் எனப் பெயர் பெற்றது. "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு" என்புழி, எண் என்பது தருக்க நூலினையே குறிக்கும் என்பர் அறிஞர் சிலர். தருக்கநூற் பயிற்சியானது அறிவுவேட்கையர் அனைவர்க்கும் இன்றியமையாதது எனக்கொண்டு, ஆசிரியர் திருவள்ளுவர் "ஆற்றின் அளவறிந்து கற்க" என்று விதித்திருப்பதுடன், அதனைக் கற்பதனாலாகும் பயன் இதுவெனத் தெருட்டுதற்காக "அவையஞ்சா மாற்றம் கொடுத்தற் பொருட்டு" எனவும் அருளிச் செய்தனர். மீண்டும், அவர் "நல்லாற்றான் நாடி அருளாள்க" எனச் சுட்டி இருப்பதும் ஈண்டு உணரற்பாலது. இங்ஙனம், அவையஞ்சா மாற்றம் கொடுத்து, வெல்லுஞ்சொல் இன்மையறிந்து சொல்லித் தருக்கு (பெருமிதம்) மிக, ஒருவரை அவையத்து முந்தியிருப்பச் செய்யவல்லது அளவை நூலாதலின், அதற்குத் தருக்கம் எனப் பெயர் வழங்குவதாயிற்று என்பர்.

சமண புத்த சமயங்கள் தமிழ் நாட்டில் தலையெடுத்து நின்ற காலத்தில் தருக்க நூல் பெரிதும் பயிலப்பட்டு வந்த தாகத் தெரிகின்றது. சமண புத்த நூல்களில் தருக்கநூற் கருத்துக்கள் ஆங்காங்கே பேசப்பட்டிருத்தல் காணலாம். சிறப்பாக மணிமேகலை, நீலகேசி போன்ற நூல்கள் இதற்குச் சான்று பகரும். தமது தருக்கநூற் புலமையைக் கொண்டு, 'கடபடம் என்றுருட்டி' ஆரவாரம்செய்து, சமண புத்த சமயத்தினர் தங்கள் சமயத்தை அந்நாளிற் பரப்பப் பெரிதும் முயன்றனர்போலும்! "கடுக்கமரும் சமணரொடு தர்க்க சாத்திரத்தவர் சொல் இடுக்கண் வரும் மொழி கேளாது ஈசனையே ஏத்துமின்கள்" "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்கவேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி" எனவரும் திருஞானசம்பந்தப் பெருமான் திருமொழிகளால் இவ்வுண்மை நன்கினிது உணரக்கிடக்கின்றது.

"வாதிகை அன்ன கவைக்கதிர் இறைஞ்சி
இரும்புகவர் வுற்றன பெரும்புன வரகே"

எனப் போதரும் மலைபடுகடாம் வரிகளுள், வரகுக் கதிர்கள் முற்றி இரண்டாகக் கவைத்து நிற்றலுக்குத் "தருக்கம் கூறுகின்றவனின் கையிடத்து இணைந்த விரல்கள்" உவமையாகக் கூறப்பட்டிருத்தலும் பிறவும், பண்டைநாளிற் சொற்போர் புரிவோர் சூழலும் தருக்க நூற் பயிற்சியும் மிக்கிருந்தமை யுணர்த்தா நிற்கும்.

இவைகளெங்ஙனமாயினும், அளவைநூல் அறிவு மிகவும் பயன்தருவதொன்று என்பதில் ஐயமில்லை. அளவைநூல், அறிவு நூல் வகைகளுள் பெரிதும் சிறப்புடையதாகும் (Scientia Scientiarum). பலவேறு அறிவு நூல்களுக்கும் அடிப்படை உறுகருவியாய் அமைந்துதவுவது அளவை நூலே எனவும் அறிஞர்கள் சிலர் கருதுவர். (The termination "logy" in biology, geology, theology, philology, psychology, etc. is said to indicate the subservience of these sciences to logic...) கண்ணில்லாத குருடன் அழகுக் காட்சிகளைக் கண்டு இன்புற முடியாதவாறு போலவும், கேட்குந் திறன் இல்லாத செவிடன் இனிய இசை

நலங்களைக் கேட்டுணர்ந்து பயன் எய்த முடியாதவாறுபோல வும், அளவைநூ லறிவில்லாதவர் உயரிய நுண்பொருள்கள் குறித்து நன்கினிது சிந்தனைசெய்து தெளிந்துணரும் சிறந் துயர்ந்த பேறுபெற இயலாதவராவர் எனலாம்.

சமய-தத்துவ ஆராய்ச்சிகளுக்குத் தருக்கநூ லுணர்ச்சி பெரிதும் இன்றியமையாததாகும். இதனை "அந்தம் ஆதி என்மனார் புலவர்" எனவரும் சிவஞானபோதத் தொட ருக்கு, "ஈண்டுப் புலவர் என்றது அளவையின் இயல் புணர்ந்தோரை" எனச் சிவஞான முனிவரர் சிறப்புரை வரைந்திருத்தல் கொண்டு செவ்விதின் உணரலாம். சைவ சித்தாந்தம் என்னும் நமது அரிய பெரிய தத்துவக் கொள்கை யானது "புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளி யாய்ப் புகல் அளவைக்கு அளவாகி"ப் பொலிவது. இக் கருத்தெல்லாம் பற்றியே சிவஞான போதத்திற்குச் சிவஞான சித்தியார் என விரிந்த வழிநூல் இயற்றிய ஆசிரியர் அரு ணந்தி சிவனார், அதன்கண் அளவையியல் எனத் தனியே ஒரு பகுதியாக அளவை நூற் பொருளைத் திரட்டித் திட்ப நுட்பமும் சுருக்க விளக்கமும் அமையக் கூறிப்போந்தார். மேலும், மறையும் அயனும் மாலுமே கூறொணாது நின்ற இறைவனியல்பினை அளவைநூல் கொண்டு ஒருவாறு சிந்தித் துத் தெளிதல் கூடும் என்னும் கருத்துப்பட, "அருளினால் ஆகமத்தே அறியலாம் அளவினாலும் தெருளலாம் சிவனை- ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம்" என அவர் குறிப்பிட்டிருத்தலும் உணரற் பாலது. எனவே, அளவையியற் பகுதிபற்றி இயன்றவரை ஈண்டு நாம் சிறிது அறிந்துகொள்ள முயலுவோமாக!

"அளவை காண்டல் கருதல்உரை அபாவம் பொருள்ஒப்புஆறென்பர்;
அளவை மேலும் ஒழிபுண்மை ஐதி கத்தோ டியல்பெனநான்(கு)
அளவை காண்பர்; அவையிற்றின் மேலும் அறைவர்: அவையெல்லாம்
அளவை காண்டல் கருதல்உரை என்றிம் மூன்றின் அடங்கிடுமே."

'அளவை(பிரமாணம்)யானது காண்டல் கருதல் உரை இன்மை பொருட்பேறு என ஆறுவகைப்படும் என்பர். ஒரு சிலர் இவற்றிற்கு மேலும், ஒழிபு உண்மை உலகுரை இயல்பு

என நான்கு அளவைகளைக் கொள்வர். மற்றும் சிலர் இப் பத்துக்கு மேலும் அளவைகள் உள எனக் கூறுவர். ஆயி னும் அவைகள் யாவும் காண்டல் கருதல் உரை என்னும் இம் மூன்றின் கண்ணேயே அடங்கும்' என்பது இப்பாட லின் பொருள். இதன்கண் சுட்டப்பெற்ற பத்துவகை அளவைகளையும் முறையே பிரத்தியட்சம் அனுமானம் ஆகமம் அபாவம் அருத்தாபத்தி உபமானம் பாரிசேடம் சம்பவம் ஐதிகம் சுபாவம் என்னும் பிரமாணங்களாக வடமொழியாளர் கூறுவர். இப்பத்து அளவைகளுள் அபாவம் பிரத்தியட்சத் தின் கண்ணும், அருத்தாபத்தி உபமானம் பாரிசேடம் சம்ப வம் சுபாவம் என்னும் ஐந்தும் அனுமானத்தின் கண்ணும், ஐதிகம் ஆகமத்தின் கண்ணும் அடங்குமாதலின், பிரத்தியட் சம் அனுமானம் ஆகமம் என்னும் மூன்று மட்டுமே முதன் மையான அளவைகளாகக் கொள்ளப்பெற்றன.

"அளவைகளாவன பொறிகளாற் காணும் காட்சியும், குறிகளானுய்த் துணரும் அனுமானமும், கருத்தாமொழியா கிய ஆகமமும் என மூன்று. ஒப்புப்பற்றி யுணரும் உவமை யும், இங்ஙனமன்றாயின் இது கூடாதென உணரும் அருத்தா பத்தியும், உண்மைக்கு மாறாய இன்மையும் என இவற்றைக் கூட்டி ஆறென்பாரும் உளர். இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே அடங்குதலின், மூன்று என்றலே கருத்து" எனவரும் பரிமேலழகரின் அரிய உரைப்பகுதியும் ஈண் டைக்கு உளங்கொளற்கு உரியது. "அறத்தா றிதுவென வேண்டா..." என்னும் திருக்குறளின் கண் 'என' என் னும் வினையெச்சத்தாற் சொல்லாகிய ஆகம அளவையும், 'பொறுத்தானே டூர்ந்தானிடை' என்றதனாற் காட்சியளவை யும், 'உணரப்படும்' என்னும் சொல்லெச்சத்தாற் கருதலள வையும் ஆகிய மூன்றும் அமைந்திருத்தல் அறிந்தின் புறற் பாலது. எனினும் ஈண்டுப் பத்து அளவைகள் பற்றியும் ஓரளவேனும் அறிந்து கொள்ளுதல் நலம் பயக்கும்.

1. **காட்சி யளவை :** ஐயமும் திரிபும் இன்றிப் பொருள்களை உள்ளபடி நேரே அறிவது. அஃதாவது கண் ணால் வண்ணமும், செவியால் ஓசையும், மூக்கால் மணமும்,

நாவாற் சுவையும், மெய்யால் ஊறும் அறிவது போல்வது. ‘ இஃதொரு பொருள்தோன்று நிற்கின்றது ’ என மட்டும் பொதுவாக அறிவது நிர்விகற்பக் காட்சி எனப்படும். தோன்றுவது பழுதையோ பாம்போ எனத் துணிவு பிற வாது நிற்றல் ஐயம். பழுதையைப் பாம்பு என்றே ஆரா யாது துணிந்து விடுதல் திரிபு. தோன்று நிற்பதனை ஊன்றி ஆராய்ந்து, அதன் பெயர் சாதி குணம் கன்மம் பொருள் என்னும் ஐந்தும் அறிந்துகொள்வது சவிகற்பக் காட்சி யாகும். “மாசறு காட்சி - ஐயம் திரிவின்றி விகற்பம் முன்னு ஆசற அறிவதாகும்” என்பது சித்தியார். இக் காட்சி யளவையானது வாயிற்காட்சி மானதக்காட்சி தன் வேதனைக் காட்சி யோகக்காட்சி என நான்கு வகைப்படும். வாயிற் காட்சியாவது மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளை வாயிலாகக்கொண்டு பொருள்களைப் பொது வாக அறிவது. பொறிகளால் அறிந்த பொருளை மனத்தின் கண் விளக்கமாக ஆராய்ந்துணர்வது மானதக்காட்சி. மான தக் காட்சியாற் பகுத்து விளங்க அறிந்த பொருள்களினல் இன்பம் துன்பம் மோகம் முதலிய அனுபவங்களை முக்குண வயத்தான் முறை முறையே உற்றறிந்துணர்வது தன் வேதனைக் காட்சி. இங்ஙனம் இன்பம் துன்பம் மோகம் முதலிய உணர்ச்சிகளின் வயப்படாமைப் பொருட்டு இயமம் நியமம் முதலிய யோக சாதனங்களால் ஒரு காலத்து ஓரிடத் திலிருந்தே, எக்காலத்து எவ்விடத்து நிகழ்ச்சிகளையும் ஒருங்கே யுணரப்பெறுவது யோகக்காட்சி. இவற்றுட் பொறி களால் உணரும் காட்சியளவை ஒன்றைமட்டுமே உடன்பட் டுப் பிற அளவைகளை உடன்படாதவன் உலகாயதன். “ஈண்டு அளவை காட்சி, அனுமானம் முதலான பல வேண்டா” என்பது அவன் கொள்கை.

2. **கருதல் அளவை:** நேரே அறியப்படுவதன்றி மறைந்துநின்ற பொருளை, அதனைவிட்டு நீங்காது யாண்டும் உடனாய் நிகழும் ஏதுவைக்கொண்டு கருதி யுணர்தல். “அனுமானம் அவினுபாவம் பேசுறும் ஏதுக்கொண்டு மறை பொருள் பெறுவதாகும்” என்பது சித்தியார். இதனையே

"காண்டற் பொருளாற் கண்டில துணர்தல்" எனச் சீத்தலைச் சாத்தனார் எளிதின் விளக்குவர். அஃதாவது, கண்ட புகையுண்மையைக் கொண்டு, புகையானது நெருப்பினைப் பிரிவின்றி அதனோடு உடனாய் நிகழும் தன்மை (அவினாபாவம்) உடையதாதலால், யாண்டுப் புகையுண்டோ ஆண்டு நெருப்பும் உண்டு எனக் கருதித் தெளிதல். இனிக் குடத்தையும் அதனை வனையும் குயவனையும் ஓரிடத்து ஒருங்கு கண்டான் அல்லுழிக் குடத்தைக் கண்டு இதுவும் வனைதற்கு ஒரு கருத்தாவை யுடையதெனக் கருதி யுணர்வதும் அதுபோல்வன பிறவும் அனுமானம் எனினுமாம்.

" தந்தை தாயரை அனுமானத்தலது
இந்த ஞாலத்து எவ்வகை அறிவாய் ?"

என உலகாயதனை நோக்கி மணிமேகலை வினவிய செய்தியும், அதனைத் தழுவி, அதன் விளக்கமே போல,

" உள்ள தாவது கண்ட தென்றுரை கொண்ட தென்?உல கத்துநீ
பிள்ளை யாய்வளர் கின்ற நாள்உனைப் பெற்ற தாயொடு தந்தையைக்
கள்ள மேபுரி காலன் ஆருயிர் உண்ண இன்றொரு காளையாய்
மெள்ள வேயுளர் என்று கொண்டு விரும்பு மாறு விளம்பிடே!"

என வரும் சிவஞான சித்தியார் செய்யுளும் அனுமான அளவை இன்றியமையாது உடன்படற் பாலதாதலை நன்கினிதுணர்த்தும்.

அனுமானமானது சுவார்த்தம் (தன் பொருட்டு) பரார்த்தம் (பிறர் பொருட்டு) என இருவகைத்தாம். அவற்றுள், "பக்கம் மூன்றின் மூன்றேது வுடைய பொருளைப் பார்த்து உணரத்தக்க ஞானம் தன் பொருட்டாம்" அனுமானம். பக்கங்கள் மூன்றாவன : பக்கம் சபக்கம் விபக்கம் என்பன. ஐயுற்றுத் துணியற் பாலதாய பொருள் இருக்குமிடம் பக்கம் (மலை). அப் பொருளுக்கு உவமையாக எடுத்துக் காட்டப் பெறும் பொருள் இருக்குமிடம் சபக்கம் (அடுக்களை). துணியற் பாலதாய பொருள் இல்லாத இடம் விபக்கம் (மடு). மூன்றேதுக்களாவன: இயல்பு காரியம் அனுபலத்தி என்பன. "மா" என்னும் சொல் மரம் குதிரை வண்டு திருமகள்

முதலிய பொருள்களுள் ஏற்ற ஒன்றை இடத்திற்குத் தக உணர்த்துவது இயல்பேது; புகை முதலிய காரியங்கள் நெருப்பு முதலிய தத்தம் காரணங்களை உணர்த்துவது காரியம் அல்லது உபலத்தி ஏது; குளிரின்மை முதலிய காரியங்களின் இன்மை பனியின்மை முதலிய காரணங்களின் இன்மையை உணர்த்துவது அனுபலத்தி ஏது. உள்ளதென்னும் உணர்விற்கு விடயம் உபலத்தி. இல்லதென்னும் உணர்விற்கு விடயம் அனுபலத்தி. முன்னிலைப் பொருளை இயல்பேதுவும், மறைந்துள்ள பொருளை உபலத்தியேதுவும், இல்லாத பொருளை அனுபலத்தியேதுவும் உணர்த்தி நிற்கும். இங்ஙனம் பக்கம் மூன்றின் மூன்றேதுவுடைய பொருளைப் பார்த்துத் தான் உணர்ந்ததனைப் பிறரும் தெளியும்படி சொல்லுவது பிறர் பொருட்டனுமானம் ஆகும். அஃது அந்நுவயம் (உடன்பாடு) வெதிரேகம் (எதிர் மறை) என இருகூறும். "புகையால் அனலுண்டு; அடுக்களைபோல்; என்னப் புகறல் அந்நுவயம்." "அனல் இலாவிடத்துப் புகையின்றாகும்; மலரினொடு முகையார் நீரிற்போல்; என்று மொழிதல் வெதிரேகம்."

பிறர் பொருட்டனுமானம் பிரதிக்ஞை ஏது திருட்டாந்தம் உபநயம் நிகமனம் என்னும் ஐவகை யுறுப்புக்களுடன் கூடிய சொற்றொடராக அமையும். இம் மலை தீயுடையது என்றல் பிரதிக்ஞை; புகையுடைமையால் என்றல் ஏது; யாது யாது புகையுடையதோ அதுவது தீயுடையது, அடுக்களை போல என்றல் திருட்டாந்தம்; இம் மலை புகையுடையது என்றல் உபநயம்; புகையுடையதாதலின் இம் மலை தீயுடையது என்றல் நிகமனம். சுருக்க விருப்பம் பற்றி இவ்வைந் துறுப்புகளுள் முதல் மூன்று மட்டுமே யமையக் கூறுவதும் உண்டு. இவ்வைந்தனுள் உபநயம் மறுதலைச் சொல். ஏனைய நான்கும் உடன்பாட்டுச் சொல்.

இனி, மணம் மிக்க மலர் ஒன்றனை முன்னரே ஓரிடத்திற் கண்டறிந்துள்ள ஒருவன், பிறிதோரிடத்தே மணம் வீசுதலாகிய ஏதுவைக் கொண்டு அங்கும் அம் மலர் உண்டு என, அதனை நேரிற் காணாத விடத்தும் அதனுண்மையைக்

கருதி யுணர்தல் பூர்வக் காட்சி யனுமானம். ஒருவன் கூறும் சொற்களைக் கொண்டு அவனது அறிவின்திறன் பண்பு முதலியனவற்றைக் கருதி யுணர்வது கருதலனுமானம். இப் பிறவியில் நாம் எய்தும் இன்ப துன்பங்கள் முற்பிறவியில் நாம் செய்த நல்வினை தீவினைகளின் விளைவேயாம் என்றால், இனி வரும் பிறவியில் நாம் எய்த இருக்கும் இன்ப துன்பங் களும் இப்பிறவியில் நாம் செய்து போதரும் நல்வினை தீவினை களால் விளையும் என, நூல்களுள் கூறப்பட்டது கொண்டு கூறப்படாத பொருளையும் ஒப்புமைபற்றிக் கருதி யுணர்வது உரையனுமானம். இதனானே "அவையிற்றின் மேலும் அறைவர்" எனப்பட்ட அளவைகள் காட்சியனுமானத்தோ டொப்பவைத்து அனுமானத்துள் அடக்கிக் காட்டப் பெற் றமை தெளியற் பாற்று.

3. **உரையளவை :** இஃது ஆகமப் பிரமாணம் எனவும் சப்தப் பிரமாணம் எனவும் வழங்கும். மணிமேகலை யின்கட் சீத்தலைச் சாத்தனார் இதனை "ஆகம அளவை அறிவன் நூலாற் போக புவனம் உண்டெனப் புலங்கொளல்" என விளக்கியுள்ளார். ஆகமமாவது ஆப்த வாக்கியம். ஆப்தனாவான் உண்மைப் பொருளைக்கூறுவோன். ஆகாங்க்ஷை (அவாய் நிலை) யோக்யதை (தகுதி) ஆசத்தி (அண்மை) தாற் பரியம் (கருத்து) என்பனவற்றால் ஆகம வாக்கியப் பொரு ளுணர்வு நிகழும் என்பர். "மருவிய அளவை காட்சி மானம் என்றிரண்டு" எனப் பௌத்தன் காட்சியும் கருதலும் ஆகிய இரண்டு அளவைகளையே ஏற்று, ஆகம அளவையினை உடன் படாது புறக்கணிப்பன். "காட்சி அனுமானம் விட்ட பொருள் விளக்குவது ஆகமமே" என்றும்,

"பழுதி லாமறை கண்ட நூல்பழு தின்றி யுண்டது பாரின்மேல்
மொழிவர் சோதிடம் முன்னி இன்னது முடியும் என்பது முன்னமே
அழிவி லாதது கண்ட னம்அவை யன்றி யுஞ்சில ஆகமங்களின்
எழுதி யோர்படி யன்று கொண்டிரு நிதியெ டுப்பதும் எண்ணிடே"

என்றும் ஆசிரியர் அருணந்தி சிவனார் ஆகமப்பிரமாணம்பற்றி விளக்கியிருத்தல் அறிதற்குரியது. இவ்வாகம அளவை யானது தந்திரம் மந்திரம் உபதேசம் என மூவகைப்படும்.

இறைவன் அருளிச் செய்த நூல்களை முன்னொடு பின் முரண் படுதலின்றிக் கடைப்பிடித்தலை யறிவது தந்திரவுரை ; மனம் முதலிய கருவிகளை யடக்கி வழிபடுந் திறனை யறிவது மந்திர வுரை ; இறைவனின் அருளியல்புகளைத் தான் உணருமாறும் பிறர்க்குணர்த்துமாறும் அறிவது உபதேசவுரை. இவ் வாறன்றி, பதி பசு பாசங்களுக்குப் பிரமாணமும் இலக்கண மும் பின்முன் மாறுகோளின்றிப் பாதுகாத்துக் கூறும் ஆகம வாக்கியங்களைத் தெரிவது தந்திர வுரை எனவும், மனுதிகள் அடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை எனப்படும் சாதன மாகிய வேண்டுஞ் செய்தி முறைமைகளைக் கூறும் ஆகம வாக் கியங்களைத் தெரிவது மந்திரவுரை எனவும், தனுதி ஈறிலா தான் தன்மை யுணர்த்துதல் எனப்படும் நிட்டையின் இயல்பு கூறும் ஆகம வாக்கியங்களைத்தெரிவது உபதேசவுரை எனவும் சிலர் கூறுவர். சரியை கிரியை இரண்டும் தந்திரத்தும், யோகம் மந்திரத்தும், ஞானம் உபதேசத்தும் அடங்கும் என்பதும் ஈண்டு அறிதற் குரியது.

4. இன்மை யளவை : இஃது அபாவப் பிரமாணம் என வழங்கும். அபாவமாவது பாவம்போலப் பாவப் பொரு ளின் தன்மையே யன்றி வேறன்று எனவும், பாவப் பொரு ளின் புலனுகாமையே அபாவம் என்னும் சொற்குப்பொருள் என்பது சித்தாந்தம் எனவும் சிவஞான சுவாமிகள் விளக்கி யிருத்தல் ஈண்டு உளங்கொளத் தக்கது. "அபாவம் என்பது இன்மை : ஓர் பொருளைத் தவாது அவ்விடத்துத் தான் இலை என்றல்" எனச் சீத்தலைச் சாத்தனுர் இதனை விளக்கியுள்ளார். இஃது ஐந்து வகைப்படும். 'யாண்டும் மொழி திறம்பார் சான்றவர்' என்பது என்றும் அபாவம். 'வாராமையில்லை வயவேந்தர்' என்பது இன்மையது அபாவம். 'பொய்ம்மை யுடன் புணரார் மேலானுர் பொய்ம்மையும் மெய்ம்மைசூழ் மேலாரை மேவாவாம்' என்பது ஒன்றினென் றபாவம். 'இன்று இரவொடு நிற்பித்த தெம்மை இறைவனை முன் வணங்க மாட்டாமை பூண்ட மனம்' என்பது உள்ளதன் அபாவம். 'கழிந்தது இளமை களிமயக்கம் தீர்ந்தது ஒழிந் தது காதல்மேல் ஊக்கம்' என்பது அழிவு பாட்டபாவம்.

5. பொருட்பேறு அளவை : இதனை அருத்தாபத்தி என்பர். பகலுண்ணான் சாத்தன் பருத்திருப்பான் எனில், அவன் இரவுண்பன் எனக்கொள்வது அருத்தாபத்தி எனவும், இவ்வூரிற் கற்றவன் இவன் எனிற் கல்லாதாரும் உண்டென உணர்வது அருத்தாபத்தி எனவும்; "ஆய்க்குடி கங்கை இருக்கும் என்றாற் கரையில் என்று எண்ணல் அருத்தாபத்தி" எனவும் பிறவாறும் கூறுவர். மறைஞான சம்பந்த தேசிகர்,

" அடுத்துல கோதும் பொருள்அருத் தாபத்தி யாம் ;இதுதான்
எடுத்த மொழியினஞ் செப்புவ தாதும் ;இவ் வூரில்அருள்
படைத்தவர் என்னிற் படையா தவர்உளர் என்றும்,இவன் [வே"
கொடுப்பவன் என்னிற் கொடாதாரும் உண்டென்றும் கொள்வது

என வரும் அரிய மேற்கோள் காட்டி இதனை விளக்கி யருள்வர். இவ் வரிய மேற்கோட்பாடல் யாண்டிருந்து அவரால் எடுக்கப்பெற்றதெனத் தெரிந்திலது.

6. ஒப்பளவு : இஃது உபமானப் பிரமாணம் என வழங்கும். ஆமா என்னும் சொற்குப் பொருளுணராதான் ஒருவன் 'ஆவினை யொக்கும் ஆமா' என ஓராண்மகன் கூறக் கேட்டுக் காட்டகம் புக்கானாக, அவன் கூறிய தொடர்மொழிப் பொருளைக் கருதி ஆவொப்புமையடுத்த பிண்டத்தைக்கண்ட பின்னர், இஃது ஆமா என உணர்தற்குக் காரணமாவது இவ்வளவை. " உவமம் ஆவது ஒப்புமை யளவு கவயமா ஆப் போலும் எனக் கருதுதல் " என்பது மணிமேகலை.

7. ஒழிபு அளவை : இது பாரிசேடம் எனப்படும். இதனை மீட்சி எனவும், மீட்சியறிவு எனவும் கூறுவர். "மீட்சி என்பது இராமன் வென்றான் என மாட்சியில் இராவணன் தோற்றமை மதித்தல்" என்பது மணிமேகலை. மூவரில் இருவர் கள்வர் அல்லர் எனில், ஏனை எஞ்சிநின்ற ஒருவன் கள்வன் எனக் கொள்வது பாரிசேடம். சல்லியன் சராசந்தன் கீசகன் பீமசேனன் என்னும் நால்வரும் ஆயிரம் யானையின் பலமுடையவர்களாதலால், இவர்களுட் கீசகனைக் கொன்றவர் யாராகலாம் என ஐயம் நிகழ்ந்தவழி, ஆங்கே சராசந்தனும் சல்லியனும் இல்லாமையால் எஞ்சிநின்ற பீமசேனனே கீசகனைக் கொன்றனனாதல் வேண்டும் எனக் கொள்வது

பாரிசேடம் எனச் சிவாக்கிரயோகிகள் இதனைச் சுவைபட விளக்குவர். "யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின் சத்தே அறியாது; அசத்து இலது அறியாது; இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா" என்னும் சிவஞான போதமும், "சத்து அசத்தைச் சாராது; அசத்து அறியாது; அங்கண் இவை உய்த்தல் சதசத்தாம் உயிர்" என்னும் திருவருட்பயனும் பாரிசேட அளவைக்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.

8. **உண்மை யளவை:** இதற்குச் சம்பவப் பிரமாணம் என்றும் பெயர். 'நூற்றில் ஐம்பது உண்டு' என்றல் சம்பவம். சம்பவம் என்பதை உள்ள நெறி எனவும், அது 'நாராசத்து இரிவில் கொள்ளத் தகுவது, காந்தம் எனக் கூறல்' எனவும் மணிமேகலை இதனை விளக்கும். 'இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்' எனத் தோல்காப்பியனார் விதித்தபடி நிலம் வலிது நீர் தண்ணிது தீவெய்து எனக் கூறுதல் போல்வனவும் சம்பவப் பிரமாணம் எனப் பெறும்.

9. **உலகுரை யளவை:** இஃது ஐதிகப் பிரமாணம் எனப் பெறும். "ஐதிகம் என்பது உலகுரை. இம்மரத்து எய்தியதோர் பேயுண்டு எனத் தெரிதல்" என்பர் சீத்தலைச் சாத்தனார். இதனைச் செவிவழிச் செய்தி எனவும் சிலர் கூறுப.

10. **இயல்பு அளவை:** இது சகஜம் அல்லது சுபாவ லிங்கப் பிரமாணம் எனவும் வழங்கும். "மா" என்பது ஒருசார் விலங்கிற்கும் ஒரு மரத்திற்கும் வண்டிற்கும் பிற பொருட்கும் பொது. மாப்பூத்தது, மாவும் மருதும் ஓங்கின என்றவழி வேறுபடு வினையானும் இனத்தானும் மரம் என்பது விளங்கும். கவசம் புக்கு நின்று 'மாக்கொணா' என்றவழிக் குதிரை என்பது சார்பினால் விளங்கும். இனையவை யெல்லாம் இயல்பளவை எனப்படும். "இயல்பு யானை மேல் இருந்தோன் தோட்டிக்கு அயல்ஒன்று ஈயாது அதுவே ஈதல்" என்பர் சீத்தலைச் சாத்தனார்.

இவ் வளவைகள் பத்தினுள் எட்டினைக் குறித்துத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தாம் இயற்றி யிருக்

கும் வேதாந்த சூடாமணி என்னும் நூலின்கண் விளக்கி யிருக்கும் பகுதி ஈண்டு நமக்குப் பெரிதும் பயன்படுவதாகும். அப் பகுதி வருமாறு :—

" கடமுதலாம் அவற்றினது காண்கை தானே
காட்சி ;புகை யால்அங்கி ஞானம்அநு மானம் ;
திடமருவும் அவ்வனுமானம், பதிஞை ஏது
திட்டாந்தம் எனும்அங்கம் உடைத்தவற்றுள், பதிஞை
இடமலைவெவ் வழல்உடைத்தென் பது;புகையுண் மையினால்
எனல்ஏது ; மடைப்பளிபோல் என்பதுதிட் டாந்தம் ;
உடைமையுணர் ஆத்தனுரை யால்நதிதீ ராதி
உறுகனியா திகள்உண்மை ஞானம்ஆ கமம்ஆம் !"

பகற்பொழுதுண் ணான்ஒருவன் இளையாமை கண்டு
பரிந்திரவுண் கற்பித்தல் காண்அருத்தா பத்தி :
அகத்தின்இலை உறுதேவ தத்தன்எனில் இருப்பன்
அவன்வேறோர் இடத்தில்எனத் தெரிந்திடுதல் தன்னைத்
தகப்பெரியர் கேள்விஅருத் தாபத்தி என்பர் ;
தகும்பசுவோ டொக்கும்மரை எனும்மொழிகேட் டிருந்தோன்
புகப்படரும் வனத்தில்அதன் விடயஞா னந்தான்
பொருந்துதலே உவமானப் பிரமாணம் ஆகும்.

இந்நிலனிற் கடமில்லை என்பதனாற் றோன்றும்
இன்மையுணர்வு அபாவம்ஆம் ; ஆயிரம்ஆ கியஎண்
தன்னில்ஒரு நூறெனும்எண் உண்டெனும்ஞா னந்தான்
சம்பவம்ஆம்; இம்மரத்தின் இயக்கன்உளன் என்னும்
சொல்நிகழ்வில் வரும்இயக்க விடயவுணர் வதனைச்
சொற்றிடுவர் அறிஞர்ஐ திகம்ஆகும் அளவை ;
என்னஇவண் தொகுத்துரைத்த காட்சிமுத லாய
எண்வகையிற் சமயர்கொளல் இன்னவென உரைப்பாம்.

புகல் உலகா யதனுக்குக் காட்சிஒன்றே; சைன
புத்தவைசே டியர்கள்தமக்கு இரண்டுஅனுமா னத்தோ(டு);
உகலருஞ்சாங் கியர்க்குமூன் றுரையொடு ; நான் குவமை
யொடுநியாயர்க்கு; அருத்தா பத்தியொடுஐந் தாகும்
மிகுபிரபா கரர்க்கு ; ஆறும் அபாவமொடு பாட்ட
வேதாந்தி கட்காகும் எனஅறிக ; தெரிவுற்
றிகல்அரும்ஒன் புராணிகர்கள் தமக்குஅளவை எட்டாம்
என்றுரைப்பர் சம்பவம்வைதி கங்களுடன் நன்றே!(தொடரும்)

# குடும்பக் கூட்டு வழிபாடு

(வித்துவான் அம்பை சங்கரனர்)

எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவியே சிறந்ததென்பது யாவரும் ஒப்ப முடிந்த உண்மை. காரணம் யாதோவெனில் அறிவானும் உருவானும் இன்ப முதலிய பல நுகர்ச்சிகளாலும் மக்கள் மேம்பட்டிருத்தலாலேயேயாம். அத்தகைய உயரிய நிலையையுடைய மக்களில் சிலர் பிறப்பால் உயர் நிலையடையினும் செயலால் சில சமயங்களில் தாழ்ந்தும் காணப் பெறுவர். அவர்களையே இலக்கியங்கள் மாக்கள் என்று இழித்துக் கூறுகின்றன.

சிறந்த மனிதப் பிறப்பைப் பெற்ற நாம் மக்கள் நிலையைப் பெற வேண்டுமே தவிர மாக்கள் நிலையை அடையக்கூடாது. அம்மாக்கள் நிலையை அடையாதிருக்க மக்கட்பண்புகளைப் பெற்றிருப்ப தொன்றே மிகவும் அமைவுடைத்தாம். அம் மக்கட் பண்புகள் பலவாயிருப்பினும் தலையாயதாகக் கருதத் தக்கது செய்ந்நன்றி மறவா நிலையில் நம்மைப் படைத்துக் காத்த பெருமானை என்றும் மறவாது போற்றும் வழிபாட்டினைக் கொண்டொழுகுதலேயாம். அவ்வழிபாடுகளும் பல திறத்தன. சிலர் கண்மூடி மௌனியாகித் தனித்த காடு முதலிய இடங்களிலிருந்து கடவுளை நினைப்பர். சிலர் கோவில் முதலிய புண்ணிய விடங்களுக்குச் சென்று பெருமானை வழி படுவர். சிவர் அவரவர்கள் கடமையைச் செய்வதே சிறந்த வழிபாடு எனக் கூறி, உண்டும் உடுத்தும் படுத்தும் காலம் கழிப்பரேயன்றி பெருமானை நினையார். மற்ற செயல்களி லெல்லாம் அவர் தவறாது செயற்படுவர். இவ் வழிபாடு ஒன்றைமாத்திரம் தமக்குரிய அன்றாடச் செயலாகக் கருதாத குற்றமே தவிர அவ்வாறு கருதின் அஃதையும் ஆற்றுவதில் அவர் சலியார். ஆகவே இவ்வழிபாடுகள் பலதிறத்தன. அவைகளில் குடும்பக் கூட்டு வழிபாட்டின் இன்றியமையாமை பற்றியே ஈண்டுச் சில காண்போம்.

''அறையிலாடி அம்பலத்தாட வேண்டும்'' என்பது பழமொழி. அம் முறைப்படி ஒருவன் தன் இளமைப் பருவம்

முதற்கொண்டே வீட்டிலேயே இறைவழிபாட்டெண்ணத்தை மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு கொள்ளாவிடில் அது அவன் குறையன்று. அவனுடைய பெற்ருேர்களின் குறை யாகும். அவன் பெற்ருேர் நன்முறையில் இறை வழிபாட் டுக் கொள்கையைப் பெற்றிருப்பின்—அதில் கருத்துச் செலுத்தியிருப்பின்—மகனும் அவ் வழிபாட்டில் தன் எண் ணத்தைச் செலுத்துகிருன். அதனுல் அவன் வாழ்வில் வழி பாட்டுக் கொள்கை மேலோங்கித் திகழும். ஆகவே ஒவ் வொரு குடும்பத்திலுள்ள பெற்ருேர்கள் தாங்கள் வழிபாட் டெண்ணம் படைத்தவர்களாதலோடு தங்கள் குழந்தைகளை யும் அத்துறையில் பழக்க வேண்டும்.

இனி அவ்வாறு பழக்குதற்குரிய வழி யாது என்பது பற்றி ஆராய்வோம். பணத்தை நிறையச் செலவு செய்து ஊர் ஊராகக் கோயில் கண்ட விடங்கள்தோறும் போய் வழி படவேண்டும் என்பதுதானு முறை? அதுவும் ஒரு வழி தான். ஆனுல் அது எல்லோருக்கும் இயல்பாக இயலாத செயலாகும். ஆயின் எல்லோருக்கும் அமைந்த பொதுவழி யாது எனில், அதுவே வீட்டிலேயே அன்ருடம் காலையிலோ மாலையிலோ குடும்பத்தினர் யாவரும் ஒருமித்து ஒரு இடத் தில் கூடித் தூய்மையாக இருந்து, விளக்கேற்றிவைத்து இறை வனை நினைத்து வழிபடும் முறையாகும். இதற்குக் காலை நேரத்தைக் காட்டிலும் மாலை நேரம் மிகச்சிறந்தது. சிறு குழந்தைகள்யாவும் பங்குகொள்ள வாய்ப்பாயிருக்கும். இதற்குக் குடும்பக் கூட்டு வழிபாடு என்பது பெயர்.

இத்தகைய குடும்பக் கூட்டு வழிபாடு ஒவ்வொரு குடும் பத்திற்கும் இன்றியமையாதது. நம் மாநிலத்தில் சில மாவட் டங்களில் சில பண்பட்ட குடும்பங்களில் உள்ள மக்கள் மாலை நேரத்தில் தண்ணீர் தெளித்து வாசல் பெருக்கிக் கோலமிட்டுப் பின்னர் விளக்கேற்றி வைப்பர். உடனே குடும் பதிலுள்ள யாவரும் தங்களைத்தூய்மை செய்துகொண்டு திரு நீறே அல்லது திருமண் காப்போ அணிந்து தங்கள் சமய அருட்பாடல்கள் சிலவற்றை மனம் நெகிழும்படியாகச் சேர்ந்து சில மணித்துளிகளாயினும் பாடுவர். பாடி உருகு

வர். ஒரு அமைதியை உண்டாக்குவர். அப்பாடல்களை எல் லோரும் நன்றாய்ப் படித்திருப்பர். பின்னரே தங்கள் வேலைக் குச் செல்வர். இந்த நியதி பழைய நியதிதான். நம் தமிழ்க் குடும்பங்களில் கையாண்டிருந்த முறைதான். ஆனால் கால வெள்ளத்தில் அடித்துப்போய் இம் முறை வழுவிற்று. இத னைத் தற்போது புதுப்பிக்கவேண்டியது இன்றியமை யாததாகின்றது. அவ்வாறு நியதியாகக் கொள்ளாத கார ணத்தால்தான் தகப்பன் ஒரு கொள்கை, தாய் ஒருகொள்கை, மகன் ஒரு கொள்கை, மகள் ஒரு கொள்கை என்ற நிலை ஏற் பட்டுள்ளது. இது அரசியல் கொள்கையோடு மாத்திரமன்று, சமயக்கொள்கையிலும் பற்றியது. அவரவர் தாம்கொண்ட கொள்கையே சிறந்ததாம் எனக் கருதி அக் கொள்கையில் வெறியும் பிடித்தாட்டத் துவங்கிப் பின்னர் குடும்பப் பிள வுக்கே, ஏன் சமூகப் பிளவுக்கே இன்னும் கூறப்புகின் நாட் டுப் பிளவுக்குமே முக்கிய அடிப்படையாகத் திகழ்கின்றது. சான்றாகப் பாகிஸ்தானம் சமய வெறியிலேற்பட்ட நாட்டுப் பிளவே யாகும்.

ஆதலால் பெற்றோர்கள் இத்தகைய பிளவுகள் ஏற்படா நிலையில் முன்னெச்சரிக்கையாக விருக்கவேண்டும். அதற்குக் குடும்பக் கூட்டு வழிபாடு எத்துணை அவசியம் என்பதை உணரவேண்டும். தங்கள் கால்வழிகள் எந்நெறியில் செல்ல வேண்டுமென்பதற்கு வழி வகுத்துக் கொடுப்பவர்கள் பெற் றோர்களே யாவர். அவர்கள் தங்கள் கடமைகளைச் செய்யத் தவறியதாலேற்படும் பலன் தற்பொழுது உலோகாயதக் கொள்கையினர் எழுச்சியுற்ற நிலையாகும்.

அதனால் நாம் பிறரைக் குற்றம் கூறாது நம்மைச் சீர் திருத்திக்கொள்ள வேண்டும். நம் குடும்பத்தையும் திருத்த முற்பட வேண்டும். நம் சமயநெறி பற்றிய உண்மை விளக் கங்களை நாமுணர்தலோடு நம்மவர்களுக்கும் விளக்கவேண் டும். நம் சமயப்பாடல்களைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க ஓதப் பழக வேண்டும். அன்றாடம் ஓதும் முறையை நித்திய கடமைகளிலொன்றாக ஆக்கிக்கொள்ள வேண்டும். வீட்டிலேயே குடும்பத்தார் சேர்ந்து பன்னிரு திருமுறை

களிலும் பன்னிரண்டு பாடல்களேயோ அல்லது பஞ்சபுராணம் எனப்படும் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப் பல்லாண்டு, பெரியபுராணப் பாடல்களேயோ முறையாக ஓதவேண்டும். இப்பாடல்களே எல்லோரும் சேர்ந்து சொல் லக்கூடிய நிலேயில் பாடப் பழகிக்கொள்ளவேண்டும். வீட்டி லுள்ள எல்லோரும் இக்கூட்டு வழிபாட்டில் நாள் தவருமல் கலந்துகொள்ளும் நியதியை மேற்கொள்ள வேண்டும்.

“ புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனே
நண்ணறி யாமல் நழுவுகின் ருரே ”

என்று திருமூலர் வழிபாட்டிலுறைப்பற்றவர் நிலேபற்றி இரக் கங்கொண்டு கூறுவதை ஆழ்ந்து சிந்தியுங்கள். “ பாவி ” என்ற சிறந்த பட்டத்தைச் சூட்டுகின்ருர். வைதல் நோக் கத்தாலன்று. இடித்துரைத்துத் திருத்தும் நோக்கத்தாலேயே யாகும். சிலர் பாடி வழிபடவே நேரமில்லே என்று கூறிவிட்டு மற்ற உண்ணல், உடுத்தல், அலங்கரித்தல் முதலியவை களுக்கு அளவிறந்த நேரத்தைக் கழிக்கும் நிலேயினர் ஆகின் றனர். இவர்கள் பூவும் நீரும் எங்கே தூவி வழிபடப் போகின்ருர்கள் ? இத்தகைய பெரியார்களே - பொறுப்பைத் தட்டிக் கழிக்குப் புண்ணியசீலர்களே-பாவி என்ற பட்டத்தை விட இன்னும் சிறந்த இழிபட்டங்களால் கூடப் போற்றுதல் அமைவுடைத்தாமன்ருே ?

“ பெருமையும் சிறுமையும் தான்தர வருமே ” என்பது முதுமொழி. “ காலங்கெட்டுவிட்டது ” என்று சிலர் காலத் தின்மேல் பழி போடுகிருர்கள். இதுபோன்றன யாவும் பொறுப்புணரார் கூறும் புல்லுரை என்றே ஒதுக்கித்தள்ளற் பாலன. உண்மை உறுதியுடன் வழிபாட்டு முறையை ஒவ் வொரு குடும்பத்திலும் பெற்ருேர்கள் மேற்கொள்வார்களே யானுல் கடவுட் பற்ருேடு மாத்திரமன்றி ஒழுக்கம் முதலிய இம்மை வாழ்க்கைக்குரிய நடைகளிலும் நம் பிற்காலச் செல் வங்கள் சிறந்தவர்களாக வாழ வழிவகுத்த பெருமை அவர் களுக்குண்டு. ஆகவே இக்குடும்பக் கூட்டு வழிபாட்டு முறை

யைப் பெருமக்கள் யாவரும் குடும்பத்தினரோடு தங்கள் வீட்டிலும் கைக்கொள்வதோடு நண்பர்கள், தெரிந்தவர்கள் முதலிய பலர் வீடுகளிலும் பரப்பும் தொண்டிலும் ஈடுபட வேண்டும். அதனால் நம் வருங்காலம் செம்மை நெறியினைப் பெறவழிவகுத்த பெருமையை அடையலாம்.

வாழ்க உலகெலாம்.

---

# தவம் யாது?

(கோவைகிழார்
திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியார், B.A., B.L.)

*உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை*
*அற்றே தவத்திற் குரு*

என்றார் வள்ளுவர். நம்மால் அல்லாமல் தானே தோன்றும் நோயைப் பொறுத்துக் கொள்ளுதல் தவமாகும். ஆனால் இந்நாளில் தவத்தின் பெயரால் உடலுக்குப் பல ஒறுத்தல்கள் தந்து அவற்றைப் பொறுத்துக்கொண்டு அதையே தவம் என்று மக்கள் கருதுகின்றார்கள். இது வள்ளுவர் கருத்து அன்று. பழனி, திருப்பதி முதலிய தலங்களுக்குச் சென்றால், நாக்கிலும் கன்னத்திலும் ஊசிகளை ஏற்றிக்கொண்டு நிற்கிறார்கள். சில இடங்களில் முட்கம்பிப் படுக்கையில் படுக்கிறார்கள். சில இடங்களில் முதுகில் கொக்கியை மாட்டித் தேரை இழுக்கிறார்கள். சில இடங்களில் மாலைபோல் குண்டூசிகளை மார்பில் மாட்டி எலுமிச்சைகளைத் தொங்க விடுகிறார்கள். மாரி, மாகாளி பண்டிகையில் நெருப்பு மிதிக்கிறார்கள். இலங்கை, பிஜி, மலேயா நாடுகளில் பலவிதமான ஊசிகளை ஏற்றிக்கொண்டு காவடி எடுக்கிறார்கள். இவைகள் எல்லாம் தவம், நோன்பு, வேண்டுதல் என்ற பெயர்களில் நடைபெறுகின்றன. இவை தவம் ஆகுமா?

ஒறுத்தல் உடலுக்கேயன்றி உயிருக்கு அல்ல. உடல் வருந்தினால் அதுதான் ப்பயிற்சிபெறும். அதுபெறும் பயிற்சியினால் பொறுத்தல் தன்மை மிகும். அதனால் ஆன்மப்

